கணபதிதுணை.

# படிக்காசுப்புலவர் சரித்திரச்சுருக்கம்.

இந்நூலாசிரியர் தொண்டைமண்டலத்திலுள்ள பொற்களத்தூரென்றுந், தென்களத்தூரென்றும் வழங்கு நகரத்திற் செங்குந்தர்மரபிலே இற்றைக்குச் சற்றேறக்குறைய இருநூற்றைம்பது வருடங்கட்குமுன் அவதரித்துப் பலதமிழ்நூல்களைச் சற்றுத்தெய்வீகம்விளங்கிய வாக்குடையவராய் இல்லறத்தில் வாழுநாளில்,அந்நாட்டிலுள்ள வல்லநகரத்திற் காளத்திவள்ளலைப்பாடிச் சிறந்தபரிசளிக்கப்பெற்றிருந்து, பின்பு மாவண்டூரிற் பிரபுவாயிருந்த கறுப்பமுதலியார் வேண்டுகோளின்படி தொண்டைமண்டலசதகமென்னு மோர்பிரபந்தத்தைப்பாடி யரங்கேற்றி அவரால் வேண்டிய திரவியங்க ளடைந்து பலதலங்களையுந் தெரிசித்துச் சிதம்பரத்தையடைந்து ஸ்ரீ சபாநாயகரை வணங்கித்துதிக்கும்போது, அவர் பஞ்சாக்ஷரப்படியிற் பொற்காசுவைத்தருளப்பெற்று, அதனாற் படிக்காசுப்புலவரெனப் பெயர்கொண்டு, அங்கே சின்னாளிருந்து, பின்பு தென்னாட்டையடைந்து, இரகுநாதசேதுபதிமுதலிய மன்னர்களைக் கண்டு பாடிப்பரிசுகொண்டு, காயற்பட்டினத்துச் சீதக்காதியென்னும் மகமதியப்பிரபுவைக்கண்டு அவர் கொடைமுதலிய நற்குணங்களைச் சிறப்பித்துப்பாடி, அப்பிரபுவால் மிக்க சிறப்புச்செய்யப்பெற்றிருந்து, பின்பு திருச்செந்தூர் முதலிய தலங்களையடைந்து வணங்கி வடதிசையைச்சார்ந்து திருத்தண்டலைநீணெறியென்னுந் தலத்தைத் தெரிசித்திருக்கும்போது, அங்குள்ள அன்பர்களின்வேண்டுகோளின்படி உலகோபகாரமாக இச்சதகத்தைப்பாடிச் சந்நிதியிலரங்கேற்றிச் சின்னாள் வசித்திருந்து பின்பு தருமபுர ஆதீனத்தையடைந்து அங்கு வீற்றிருந்தருளிய ஞானாசாரியரால் ஞானதீக்கையுஞ் சந்நியாசமும் பெற்றுப் படிக்காசுத்தம்பிரானெனப்பெயர்பூண்டிருக்கு நாளில், ஒருநாட் காவிரிநீராடச் சென்றபொழுது தவசிப்பிள்ளையினிடங் கொடுத்த வஸ்திரத்தை வெள்ளமெடுத்துக்கொண்டுபோய்விட அவன் வருந்தல்கண்டு,

"அப்பிலே தோய்த்திட் டடுத்தடுத்து நாமதனைத்
தப்பினு னம்மையது தப்பாதோ—வப்பாகே
ளிக்கலிங்கம் போனுலென் னேகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்க முண்டே துணை"

என்னுஞ்செய்யுளைப்பாட, அவ்வஸ்திரம் மீண்டுங்கரையில்வரப்பெற்றுத் தமதுநியதி முடித்திருந்தனர். இவ்வாறு பல விசித்திரப்பாக்களைப்பாடி, அங்கேயிருந்து தம்மாசிரிய ராக்ஞைப்படி வைத்தீசுரர்கோயிலை யடைந்து, அக்கோயிற்கட்டளைப்பணிகளை நடாத்திக்கொண்டு புள்ளிருக்குவேளூர்க்கலம்பகமென்னும் ஓர்பிரபந்தமியற்றி, அச்சந்நிதியி லரங்கேற்றி வாழ்வுற்றிருந்தனர். பின்பு முன் தமக்குப் படிக்காசு தந்தருளிய சபாநாயகர்சந்நிதியிலே தொண்டுசெய்திருந்து நற்கதியடையவேண்டுமென்னும் அன்புமேலீட்டால் தம்மாசிரியரிடம் விடைபெற்றுச் சிதம்பரத்தைச்சார்ந்து ஒரு திருமடஞ் செய்திருந்துகொண்டு தினந்தோறுஞ் சபாநாயகரைத் தெரிசித்துவரும்பொழுது அவர் முன்போலப் பஞ்சாக்கரப்படியிற் பொற்காசுவைத்தருளப் பெற்றுச் சின்னுண் மாணுக்கர்களுக்குக் கல்விபயிற்றியிருந்து சபாநாயகருடைய திருவடியடைந்தாரென்பர். இத்தண்டலையார் சதகத்தைத் தண்டலைச்சேரிச்சாந்தலிங்கக் கவிராயரியற்றியதாகவுங்கூறுவர்.

திருச்சிற்றம்பலம்.

---

உ

கடவுள் துணை.

# பழமொழிவிளக்கம்

என்னும்

# தண்டலையார் சதகம்.



காப்பு.

சீர்கொண்ட கற்பகத்தின் வாதாவி நாயகனைத் தில்லை வாழுங்
கார்கொண்ட கரிமுகனை விகடசக்ர கணபதியைக் கருத்துள் வைப்பாம்
பேர்கொண்ட ஞானநா யகிபாகன் றண்டலையெம் பெருமான் மீதி
லேர்கொண்ட நவகண்ட மிசைந்தபழ மொழிவிளக்க மியம்பத் தானே.
வேதநெறி விளம்பியசொல் லாகமநூல் விளம்பியசொன் மிகுபு ராண
மேதுவினிற் காட்டியசொல் லிலக்கணச்சொல் லிசைந்தபொரு ளெல்லா நாடி
யாதிமுத லுலகுதனில் விளங்குபழ மொழிவிளக்க மறிந்து பாடச்
சோதிபெறு மதவேழ முகத்தொருவ னகத்தெனக்குத் துணைசெய் வானே.

அவையடக்கம்.

வள்ளுவர்நூ லாதிபல நூலிலுள வரும்பொருளை வண்மை யாக
வுள்ளபடி தெரிந்துணர்ந்த பெரியவர்கண் முன்னுனு மொருவன் போலப்
பள்ளமுது நீருலகிற் பரவுபழ மொழிவிளக்கம் பரிந்து கூறல்
வெள்ளைமதி யினன்கொல்லத் தெருவதனி லூசிவிற்கும் வினைய தாமே.



## நூல்.

வரமளிக்குந் தண்டலையார் திருக்கோயி லுட்புகுந்து வலமாய் வந்தே
யொருவிளக்கா கிலும்பசுவி னெய்யுடன்று மறைநூலி னுளிர வைத்தாற்
கருவிளக்கும் பிறப்புமில்லை யிறப்புமில்லை கைலாசங் காணி யாகுந்
திருவிளக்கிட் டார்தமையே தெய்வமறிந் திடும்வினையுந் தீருந் தானே. (1)

"திருவிளக்கிட்டாரைத் தெய்வமறியும்" "விளக்கிட்டால் வினை தீரும்" என்பன பழமொழி.

---

* அகப்பொரு ளொன்றின்மேலாவது புறப்பொரு ளொன்றின் மேலாவது கற்பித்து நூறுகவிபாடுவது சதகமென்பர்.

கூன்செய்த பிறையணியுந் தண்டலையார் கருணைசெய்து கோடி கோடி
யான்செய்த வினையகற்றி நன்மைசெய்தா ருபகார மென்னு லுண்டோ
ஊன்செய்த வுயிர்வளரத் தவந்தானம் வளர்ந்தேற வுதவி யாக
வான்செய்த நன்றிக்கு வையகமென் செய்யுமதை மறந்தி டாதே. (2)

உயிர்செய்த வினையாற் சரீரம் உண்டாவதனால் ஊன்செய்த உயிர் என்றார். ஊன்–உடம்பு. "கைம்மாறு வெண்டா கடப்பாடு மாரிமாட்–டென்னாற்றுங் கொல்லோ வுலகு" என்பது திருக்குறள். 'வான்செய்த வுதவிக்கு வையகந்தானென்செய்யும்' என்பது பழமொழி. வான்-மேகம்.

அட்டதிசை யெங்கணும்போ யலைந்தாலும் பாதாள மிதிற்சென் றாலும்
பட்டமென வானூடு பறந்தாலு மென்னவதிற் பயனுண் டாமோ
பிட்டுவர மண்சுமந்த தண்டலையா ரேமுன்னுட் பெரியோர் கையி
லிட்டபடி யேயொழிய வேருசைப் படில்வருவ தில்லைதானே. (3)

"இட்டபடியன்றி யேருசைப் பட்டாற்கிடைக்குமோ"? என்பது பழமொழி.

தன்மமதைச் செயல்வேண்டுந் தண்டலைநீ ணெறியாரே தயவு செய்வார்
வன்மவினை செயல்வேண்டா பொய்வேண்டா பிறரையொன் றும் வருத்தல்
கன்மநெறி வரல்வேண்டா வேண்டுவது பலர்க்குமுப கார மாகு [வேண்டா
நன்மைசெய்தார் நலமபெறுவர் தீமைசெய்தார் தீமைபெற்று நலிவர் தாமே. (4)

"நன்மைசெய்தார் நன்மைபெறுவர் தீமைசெய்தார் தீமைபெறுவர்" என்பது பழமொழி.

புல்லறிவுக் கெட்டாத தண்டலையார் வளந்தழைத்த பொன்னி நாட்டிற்
சொல்லறமா தவம்புரியுஞ் சௌபரியுந் துறவறத்தைத் துறந்து மீண்டா
னல்லறமாம் வள்ளுவர்போற் குடிவாழ்க்கை மனைவியுட னடத்தி நின்று
லில்லறமே பெரிதாகுந் துறவறமும் பழிப்பின்றே லியற்கை தானே. (5)

சௌபரி என்பவர் ஒருமுனிவர். இவர் ஒரு காலத்து யமுனை நதிக்குத் தீர்த்தமாடச்சென்று அந் நதிக்கரையில் நிற்கையில், மீனிரட்டைகள் தமது பலகுஞ்சுகளையும் இடையில்விட்டுத் தாம் அவைகளுக்குக் காவலாய் இருபக்கத்திலும் இருந்து பாதுகாத்து விளையாடுதலைக் கண்டு, தாமும் அவ்வகையிருக்க வெண்ணி, மாந்தாதாவின் நூறு குமாரிகளை மணந்து அப்பெண்கள்களிக்க இன்பந்தந்து, இருக்கையில், மாமன் மாமிமார்கள் இந்தமுனிவருக்கு நம்முடைய குமாரிகளைக் கொடுத்

தோமே எனச் சிறிதுநாள் பொறுத்து அப் பெண்களைக் காணவர, முனிவர், ஒவ்வொரு பெண்ணினிடத்தும் ஒவ்வொருவராகத் தனித்தனி யிருத்தல்கண்டு களித்துச் சென்றனர் என்பது கதை. இதனை, அபி தானசிந்தாமணியிற் காண்க. "அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்-பிறன்பழிப்ப தில்லாயி னன்று"-என்பது திருக்குறள். "இல் லற மல்லது நல்லற மன்று"-என்பது ஆத்திசூடி. 'அறத்து ளில்லறமேபோலும்'-என்பது மாயூரப்புராணம். (நாட்டுப்படலம்.க.) திரு வள்ளுவர்மனைவியின் பெயர்-வாசுகி.

முக்கணர்தண் டலைநாட்டிற் கற்புடைமங் கையர்மகிமை மொழியப் போமோ
வொக்குமெரிகுளிரவைத்தாளொருத்திவில்வேடனையெரித்தாளொருத்திமூவர்
பக்கமுற வமுதளித்தா ளொருத்தியெழு பரிதடுத்தா ளொருத்தி பண்டு
கொக்கெனவே நினைந்தனையோ கொங்கணவா வென்றொருத்தி கூறி னாளே.(6)

எரிகுளிரவைத்தாள்-சீதாபிராட்டி. அனுமான்வாலிற் றீக்கொளுத் தியபோது சுடாதிருக்கும்படி செய்தனள். இராமாயணம், சுந்தர காண்டம், இலங்கை யெரியூட்டுபடலத்திற் காண்க.

வேடனை யெறித்தவள்—தமயந்தி. தன்னைவிரும்பிவந்த வேடனை யெரித்துவிட்டாள். நைடதம்-பிரிவுறுபடலத்திற் காண்க.

மூவர் பக்கமுற வமுதளித்தா ளொருத்தி—அத்திரிமுனிவர் மனைவி, அநசூயை. தன்னைவிரும்பிவந்த திரிமூர்த்திகள் அமுதுவேண்ட, அவ்வாறே யமுதளித்துத் தன்கற்பினால் அவர்களைப் பிள்ளைகளாகப் பெற்றாள். அம்மூவரையும் முறையே துருவாசர் தத்தாத்திரேயர், சோமர் என்பவராகப் பெற்றாளென்பர். (அபிதானசிந்தாமணி.)

எழுபரிதடுத்தாள் -- நளாயினி; மௌத்கல்ய முனிவர் மனைவி. முனி வர் பரத்தைவீட்டுக்குப்போகவேண்டுமெனக்கூற, இவ ளிசைந்து நடக்க முடியாத பிணியாளராயிருந்த அம் முனிவரைக் கூடையில் வைத்து இரவிற் றூக்கிக்கொண்டுபோகும்போது, பூர்வகர்மத்தாற் கழுவிலிடப் பட்டுக்கிடந்த மாண்டவியமுனிவர்காலிற் றட்டவே அவர்வருந்தி யிவளை நோக்கி விடிந்தபின் நீ விதவையாகக்கடவாயென்று சபிக்க, இவள் விடியாதிருக்கக்கடவதென்று மறுத்துச் சபித்தாள்; அதனால் விடியா திருந்தது பற்றித் தேவர் முதலாயினோர் நித்தியகரும நடவாமைகண்டு, அவர்கள் மாண்டவியமுனிவரைவேண்ட, அம் முனிவர் இவளைவேண்டப் பொழுது விடியச் செய்தாள் என்பது மகாபாரதம்.

"கோக்கெனவே நினைந்தனையோ கொங்கணவா" என்றவள்— திருவள்ளுவர்மனைவியாகிய வாசுகி. மேலே பறந்துபோகிற கொக்குக் கழித்த மலம் தம்மேல்விழக் கோபமுண்டாகிப் பார்த்து, அக்கொக்கினை யெரித்த கொங்கண முனிவர் வாசுகிமனையிலேவந்து பிச்சைகேட்ட போது வாசுகி சிறிது தாமதித்துக்கொண்டுவந்த காரணத்தால் முனிவர் கோபித்துப்பார்க்கக்கண்ட இவள் 'கொக்கென்று நினைந்தனையோ கொங்கணவா' என்றனள். முனிவர் கர்வபங்கமுற்றுப் போனார். இதனை அபிதானசிந்தாமணியி லறிக.

நன்றிதரும் பிள்ளையொன்று பெற்றாலுங் குலமுழுது நன்மை யுண்டா
மன்றியறி வில்லாத பிள்ளையொரு நூறுபெற்று மாவ துண்டோ
மன்றினடம் புரிவாரே தண்டலையா ரேசொன்னேன் வருடந் தோறும்
பன்றிபல வீன்றுமென்ன குஞ்சரமொன் றீன்றதனாற் பலனுண் டாமே. (7)

"பன்றி பலகுட்டிபோட்டென்ன? யானை ஒரு குட்டிபோட்டாற் போதும்" என்பது பழமொழி.

அல்லமருங் குழலாளை வரகுணபாண் டியராச ரன்பா லீந்தார்
கல்லைதனின் மென்றுமிழ்ந்த ஆனமுதைக் கண்ணப்பர் கனிவா லீந்தார்
சொல்லியதண் டலையார்க்குக் கீரையுமா வடுவுமொரு தொண்ட ரீந்தார்
நல்லதுகண் டாற்பெரியோர் நாயகனுக் கென்றதனை நல்கு வாரே. (8)

கல்லை—இலையாற்றைத்ததொன்னை.

வரகுணபாண்டியன் மனைவியையீந்தது:—வரகுணபாண்டியன் ஒரு நாள், குதிரைமேலேறி வேட்டைக்குச்செல்லும்போது, வழியிற்படுத்திருந்த ஓரந்தணனைத் தன்குதிரை மிதித்துக்கொல்ல, அதனாற் றன்னைத்தொடர்ந்த பிரமகத்தி நீங்குவதற்காகத் திருவிடை மருதூருக்குச் சென்று, அங்கே கோயில்கொண்டுள்ள மருதவாணர் கிருபையால், அப்பிரமகத்தி நீங்கப்பெற்றுச் சிலகாலம் அங்கிருந்தபோது, தான் மணம்புரிந்த மனையாளின் பேரழகைநோக்கி, இந்த நல்ல பெண்ணைச் சிவபெருமானுக்குக் கொடுக்கவேண்டுமென நினைத்து, மனையாளை யழைத்துக்கொண்டு இரவிலே திருக்கோயில்வாயிலை யடைந்து, "கோயிலைத்திறவிடைமருதாவெனக்கூவ—வாயிலைத் திறந்திறைவனும் வரகுண வென்ன" இவன், சுவாமி, இவளை யேற்றுக்கொள்ளவேண்டுமெனக் கொடுத்துவந்தான். பின் மருதவாணர் அவளைவிழுங்கிக் கைபமாத்

திரம்விழுங்காமல் வெளியேதோன்ற வைத்திருந்தார். விடிந்தபின்பு சுவாமிதரிசனஞ்செய்தவர்கள்மூலமாய் இவ்விஷயமறிந்த அரசன் திடுக்கென ஓடிவந்து, சுவாமி! பாவியாகிய யான் பிடித்ததென்றோ? கையை மட்டும் நீக்கிவிட்டீரென்று கூறச் சுவாமி அக்கையையும் விழுங்கிவிட்டார்.

கண்ணப்பநாயனர் ஊனமுதருத்தியது:- பொத்தப்பிநாட்டிலுள்ள உடுப்பூரில் வேடராசனுயிருந்த நாகனுக்கு, முற்செய்ததவத்தாற் பிள்ளையாயவதரித்த திண்ணனுரென்பவர், தங்கள் குலத்துக்குரிய வில்வித்தைமுதலியன இளமையிலே கற்பிக்கப்பெற்று வளர்கின்றநாளில், ஒருநாள் இவர் வேட்டையாடுவதற்காக வீரர்களுடன் வனத்திற்சென்று, மிருகங்களைக் கொலைபுரியும்போது, ஓர்பன்றி தமக்ககப்படாது நீங்கித் தென்றிசைநோக்கிச் செல்ல அதுகண்ட இவர் வீரர்களை நீங்கிப் பன்றியின்பின் றொடர்ந்துசென்று காளத்திமலையைக் கண்டார். அப்போது முன்செய்த தவப்பெருக்கமானது அன்பினைத் தோற்றுவிக்க, அதனாலளவிலாத ஆசை அதிகரிக்க, அம்மலையைநோக்கி யேறிக் காளத்திநாதரைக் காணும்போது, திருவருள்நோக்கம் பொருந்த, அதனாலே முற்பிறப்பின் சம்பந்தம் நீங்க, அங்நாதரிடத்து அன்புருபமாக விளங்கினார். பின்பு திண்ணனார் சுவாமியை ஓடித் தழுவி மோந்துநின்று, சுவாமி! வேடர் மிருகங்களிருக்கின்ற விடத்திலே துணையின்றி யிருக்கலாமோ? என்று வருந்தி, நீர்வார்த்துப் பூவும் பச்சிலையுஞ் சாத்தியிருப்பது கண்டு, சுவாமிக்கு நல்லசெய்கை யிவையாமெனக் கடைப்பிடித்துத் தாமு மவ்வாறு செய்யவெண்ணிச் சுவாமியைப் பிரிந்துபோகமுடியாதவராய்ப் போவாராய், மீளவந்து தழுவுவாராய்க் கானகத்துச்சென்று கொன்றமிருகத்தின் இறைச்சியமுதைக் கல்லையிலும், திருமஞ்சனமாட்ட நீரை வாயிலும், பறித்த மலரிலைகளைக் குடுமியிலும் வைத்துக்கொண்டு வில்லையும் பாணத்தையும் ஒருகையிலேந்திச் சுவாமிபசித்திருப்பரென்று விரைந்துவந்து திருமுடியிலிருக்கிற மல ரிலைகளைக் காலிலணியுஞ் செருப்பான்மாற்றி, உள்ளன்பைச் சொரிவார்போல், வாயிற்கொண்டுவந்த நீரைச் சொரிந்து, குடுமியிற் கொண்டுவந்த பத்திரபுஷ்பங்களை வணங்கிச் சாத்திக் கல்லையிற்கொணர்ந்த ஊனமுதை எதிரேவைத்துப் பக்குவம்வாக் காய்ச்சி மென்றுபார்த்தது; சுவாமி! இந்த இறைச்சி, நல்ல இறைச்சி; இதை யமுதுசெய்யவேண்டுமென வேண்டினார். அப்போது இரவும்

வந்தது. பின் திண்ணனார் சுவாமியை மிருகங்கள் துன்புறுத்து மென்று அம்பையும் வில்லையுந் தாங்கிப் பக்கத்திலே விழித்துக்கொண் டகலாது நின்றார். அவ்வாறிருந்தவர் விடியும்போது திருவமுது கொண்டுவருவதற்குப் போயினார். பின்பு சுவாமியைப் பூசிக்கவந்த சிவகோசரியாரென்பவர், பூசைக்குவேண்டிய உபகரணங்களுடன் வந்து பார்த்து, இறைச்சிமுதலாயின கிடக்கக்கண்டு மிகவருந்தி இந்த அநு சிதம் செய்தார் வேடரே; சுவாமி! இதற்குந் திருவுள்ளங்கொள்ளலாமோ? என்று விண்ணப்பஞ்செய்து இறைச்சிமுதலியவெல்லாம் நீக்கி, நீராடி வந்து, பரிசுத்தமாக்கி வழக்கப்படி பூசைசெய்து வணங்கித் தாமிருக்கு மிடஞ் சென்றார். அதன்பின்பு திண்ணனார் வழக்கப்படி இறைச்சிமுத லியனவும், தேனுங் கொண்டுவந்து முன்புபோல் அபிஷேகமுதலியன செய்து தேனுடன்கலந்த ஊனமுதை யெதிரேவைத்துச் சுவாமி! இதில் தேனுங் கலந்திருக்கின்றது; முன்னையினும் நன்றாயிருக்கின்றது; அடி யேனுஞ் சுவைகண்டேன் என்று கூறித் திருவமுதுசெய்யவேண்டித் தம் பூசையை முடித்துச் சுவாமிக்கு எதிரேநின்று, இரவினுறங்காராய்ப் பக லில் வேட்டையாடுபவரா யிருந்தார். பின்னர்ச் சிவகோசரியார் பழைய படி பூசித்துச் சுவாமியை வேண்டிப் போயினார். அவர்கனவிற் சுவாமி யெழுந்தருளி "வேடனென் றவனைநினையாதே. அவ னன்பின்செயலை நாளை யுனக்குக் காட்டுகின்றோம்; நீ யொளித்திருந்து பார்ப்பா யென்று மறைந்தருளினார். உடனே சிவகோசரியாரும் விழித்து மகிழ்ந்து வந்து மறைவாயிருந்தார். திண்ணனாரும் ஆறுவதுநாளில் வழக்கப்படி ஊனமுதுமுதலாயின கொண்டுவரும்போது சுவாமி வலக்கண்ணில் உதிரமொழுகும்படி யிருந்தார். திண்ணனார் கண்டவுடன் பதறிக் கையிலிருந்த ஊனமுது முதலாயின கீழேவிழத் தாமும் விழுந் தழுது இவ்வாறுசெய்தவர் வேடரோ? விலங்குகளோ? என்று தேடிக் காணாது சுவாமியைக் கட்டிக்கொண்டு கதறி, அழுதுபுலம்பி, என் செய்தாற் றீருமென்றெண்ணிப் புண்ணைத்தீர்க்கச்செய்யு மருந்தைத் தேடிக் கொண்டுவந்து பிழிந்து சுவாமிகண்ணில் வார்த்தார். அம்மருந்தாற் றீராது பின்னு மிரத்தம் அதிகமாகவொழுக, இனி யென்செய்வோ மென்றுவருந்தி யோசித்து, ஊனுக்கு ஊனிடவேண்டுமென்னும் பழ மொழியைத்தெரிந்து, என்கண்ணை யம்பாற்றோண்டிச் சுவாமிகண்ணி லப்பினால் இரத்தம் விழாதிருக்குமென்று நினைத்து, மகிழ்ந்தமனத் தோடு முன்னிருந்து தங்கண்ணை யம்பாற் றோண்டியெடுத்துச் சுவாமி

கண்ணிலப்ப, உடனே இரத்தம் ஒழுகாதிருந்ததுகண்டு, தாஞ் செய்த செயலை மகிழ்ந்து மகிழ்ந்து கூத்தாடிக் களிப்புற்றிருந்தார். திண்ணனு ரன்பினைப் பின்னுமறிவிக்கவேண்டிச் சுவாமி இடக்கண்ணில் உதிர மொழுக இருந்தார். அதைக்கண்ட திண்ணனுர் இதற்கஞ்சேன்; மருந்து கைகண்டிருக்கின்றேன்; அதனுல் இன்னுமொருகண்ணைத்தோண்டி அப்பிவிடுவேனென்று தங் கண்ணைத்தோண்டி யப்புவதற்குச் சுவாமிகண் ணோர்தெரிவதற்காகச் சுவாமி வலக்கண்ணிலே தம் இடக்காலையூன்றி, அம்பையெடுத்துத் தம் வலக்கண்ணிலூன்றினுர். உடனே சுவாமி தம் திருக்கையால் திண்ணனுர்கையைத் தடுக்க, "நில்லு கண்ணப்ப" வென மூன்று அடுக்குவார்த்தை யெழுந்தன. இவையெல்லாஞ் சிவ கோசரியார் பார்த்து மகிழ்ந்திருந்தனர். தேவர்கள் பூமாரிபொழிந் தனர். சுவாமி திண்ணனுரை 'என் வலப்பக்கத்தே நிற்க' வென் றருளிச் செய்தார். இதனுலே திண்ணனுர் கண்ணப்பநாயனு ரெனப் பெயர் கூறப்பெற்றுர். (பெரியபுராணம்.)

கீரையும் மாவடுவும் ஒரு தொண்டரீந்தா ரென்றது—அரிவாட்டாய நாயனுரை. இவர் சோழநாட்டிலுள்ள கணமங்கையென்னு மூரிலே வேளாண்குடியிலவதரித்த தாயனுரென்னும் பெயருள்ளவர். சிவபெரு மானிடத் தன்புள்ளவராய், அவர்க்குச் செந்நெலரிசி செங்கீரை மாவடு வைத் திருவமுதாகச் செய்வித்து வருவார். வறுமைவந்தகாலத்திலும் இவர் செய்யுஞ் செயலை யுலகறியும்படி, இவர் செல்வத்தைச் சிவபெரு மான் நீக்கியருளினுர். தாயனுர் அப்போதுந் தஞ் செய்கைவிடாது நடத்திக் கூலிக்கு நெற்கதி ரறுத்துக் கூலிவாங்கிச் செந்நெல்யாவுஞ் சுவாமிக்கே யாக்கிக் கருநெல்லைத் தம் உணவிற்காக்கிவந்தார். சுவாமி, வயலெலாஞ் செந்நெல்லாகவே விளையச்செய்தனர். தாயனுரதுகண்டு நான் செய்தபுண்ணியமே யென்று, கூலிக்குவருஞ் செந்நெல்யாவும் சுவாமி திருவமுதுசெய்யக் கொடுத்துவிட்டு மனைக்கொல்லையிலிருந்த கீரை யினைக்கொய்து மனைவியார் சமைத்துவைக்கப் புசித்துத் தமது திருப் பணியைக் குறைவின்றிச் செய்துவந்தார் பின்பு அக்கீரையுங் கிடை யாமையால் மனைவியார் தண்ணீர்கொடுக்க அதனையுமருந்தியிருக்கு நாளிலே, ஒருநாள், சுவாமிக்காகச் செந்நெலரிசியும், செங்கீரையும், மாவடு வுங் கூடையிலெடுத்துக்கொண்டு தாமுன்செல்ல மனைவியார் பஞ்சகௌவி யத்தையெடுத்துக்கொண்டு பின்செல்லும்போது நாயனுர் தளர்ந்துவீழக்

கண்டு மனைவியார் கையாலணைக்க அரிசிமுதலாயின கமரிலே சிந்திவிட்டன. தாயனர் வருந்தி யினி ஆலயத்திற்குப் போவ தெதற்காகச் சுவாமி திருவமுதுசெய்யும்பேறுபெற்றிலேனே யென்று கையிற்கொண்ட அரிவாளைப்பூட்டித் தங் கழுத்தை யரிந்தார். உடனே தாயனார்கையை மாற்றச் சுவாமி திருக்கையும், மாவடுவைக் கடித்ததனு லுண்டாகிய விடேல் விடேலென்கிற வோசையு மொக்கவே கமரினின்று மெழுந்தன. திருக்கை யரிவாளைப்பற்றுங்கையைப் பிடித்தபோது, கழுத்தையரிந்த ஊறெல்லாம் நீங்க, மகிழ்ச்சியுண்டாகத் தாயனர் சுவாமி திருவருளை நினைந்து, கும்பிட்டுத் தோத்திரஞ்செய்தார். சுவாமி யிடபவாகனரா யெழுந்தருளி நின்செயலை மகிழ்ந்தோம்; நீ நின்மனைவியுடனே நமது சிவலோகத்தையடைவாயென்று அவருடனே எழுந்தருளினர். கழுத்தினை யரிவாட்பூட்டியரிதலால் இவர் அரிவாட்டாயநாயனரெனப் பெயர் பெற்றார். (பெரியபுராணம்.)

திருவிருந்த தண்டலையார் வளநாட்டி லில்வாழ்க்கை செலுத்து நல்லோ
ரொருவிருந்தா கிலுமின்றி யுண்டபகல் பகலாமோ வுறவாய் வந்த
பெருவிருந்துக் குபசாரஞ் செய்தனுப்பி யின்னமெங்கே பெரியோ ரென்று
வருவிருந்தோ டுண்பதல்லால் விருந்தில்லா துணுஞ்சோறு மருந்து தானே. (9)

இக்கவியில், பின்னிரண்டடியில், "செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா-னல்விருந்து வானத் தவர்க்கு" என்னுந் திருக்குறளையும், "விருந்திலாச்சோறுமருந்து". என்னும் பழமொழியையுங் குறிப்பிட்டதறிக.

பொற்குடையும் பொற்றுகிலும் பொற்பணியுங் கொடுப்பதென்ன பொருளோ
நற்கமல முகமலர்ந்தே யுபசார மிக்கவின்சொ னடந்தா னன்றே [வென்று
கற்கரையு மொழிபாகர் தண்டலையார் வளநாட்டிற் கரும்பி னேய்ந்த
சர்க்கரையின் பந்தலிலே தேன்மாரி பொழிந்துவிடுந் தன்மை தானே. (10)

'சர்க்கரைப்பந்தலிலே தேன்மாரி பொழிந்ததுபோலிருக்கிறது' என்பது பழமொழி.

குறும்பெண்ணு துயர்நூல்லோ ராயிரஞ்சொன் னாலுமதைக் குறிக்கொ ளாமல்
வெறும்பெண்ணுசையிற்சுழல்வேன்மெய்ஞ்ஞானம்பொருந்தியுனைவேண்டேனா
வுறும்பெண்ணுரமுதிடஞ்சேர்தண்டலைநீணெறியேயென்னுண்மைதேறி [தோ
லெறும்பெண்ணுயிரமப்பாற்கழுதையுங்கைகடந்ததென்றேனெண்ணந்தானே,()

"தண்டலைநீணெறியே" யென்று சுவாமியை நோக்கிக் கூறினாரென் றறிக. உலகினர்செய்யு நித்திய நைமித்திய காமியவினைகளை யேற் றநுக்கிரகம்புரிவதற்காகத் தலமுந் தீர்த்தமு மூர்த்தியுமாகச் சுவாமி வந் திருக்கிறபடியால் அவ்வாறுகூறினாரென்க "எறும்பெண்ணாயிரம் அப்பாற் கழுதையுங் கைகடந்தது" என்ற வாக்கியம், ஒருமாணாக் கனுக்கு, ஓர் ஆசாரியர் நல்ல நீதிகளைப் போதித்துக்கொண்டிருந்து பின்பு யாவுந் தெரிந்தனையோவென்று கேட்க, அங்கேபோயின எறும்பு களை யெண்ணிக்கொண்டும், வந்துபோன கழுதைகளைப் பார்த்துக் கொண்டுமிருந்த வறிவிலாமாணாக்கன்கூறிய தென்க.

துப்பிட்ட வாலம்விதை சிறிதெனினும் பெரிதாகுந் தோற்றம் போலச்
செப்பிட்ட தினையளவு செய்தநன்றி பனையளவாச் சிறந்து தோன்றுங்
கொப்பிட்ட வுமைபாகர் தண்டலையார் வளநாட்டிற் கொஞ்ச மேனு
முப்பிட்ட பேர்கடமை யுளவரையு நினைக்குமிந்த வுலகந் தானே. (12)

இக்கவியிலே, "தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக் கொள்வர் பயன்றெரி வார்." என்ற திருக்குறளையும், "உப்புக்கொடுத்த பேரையுள்ளளவு நினைக்கவேண்டும்" என்னும் பழமொழியையுங் குறித் ததறிக. கொப்பு—மாதர்காதணியினொன்று.

மேட்டுக்கே விதைத்தவிதை வீணருக்கே செய்தநன்றி மேயும் பட்டி
மாட்டுக்கே கொடுத்தவிலை பரத்தையர்க்கே தேடியிட்ட வண்மை யெல்லாம்
பாட்டுக்கே யருள்புரியுந் தண்டலையார் வீதிதொறும் பரப்பி டாமற்
காட்டுக்கே யெரித்தநிலாக் கானலுக்கே பெய்தமழை கடுக்குந் தானே. (13)

'காட்டுக்கெரித்த நிலவுங் கானலுக்குப் பெய்தமழையும் போலா கும்' என்பது பழமொழி. பட்டிமாடு—கள்ளமாடு.

சங்கையறப் படித்தாலுங் கேட்டாலும் பிறர்க்குறுதி தனைச்சொன்னாலு
மங்கணுல கினிற்சிறியோர் தாமடங்கி நடந்துகதி யடைய மாட்டார்
திங்களணி சடையாரே தண்டலையா ரேசொன்னேன் சிறிது காலங்
கங்கையிலே படர்ந்தாலும் பேய்ச்சுரைக்காய் நல்லசுரைக் காயா காதே. (14)

'கங்கையிலே படர்ந்தாலும் பேய்ச்சுரை நல்லசுரையாகாது' என் பது பழமொழி.

உழையிட்ட விழிமடவா ருறவுவிட்டும் வெகுளிவிட்டு முலக வாழ்விற்
பிழைவிட்டு மின்னமின்ன மாசைவிடா தலக்கழியப் பெற்றே னந்தோ

தழையிட்ட கொன்றைபுனை தண்டலைநீ ணெறியேயென் றன்மை யெல்லா
மழைவிட்டுந் தூவானம் விட்டதில்லை யாயிருந்த வண்ணந் தானே. (15)

உழை—மான். 'மழைவிட்டுந் தூவானம் விடவில்லை' என்பது பழமொழி.

கொச்சையிற்பிள் ளைக்குதவுந் தண்டலையார் வளநாட்டிற் கொடியாய் வந்த
வச்சிரன்பிள் ளைக்குமுன மாதவனே புத்திசொன்னான் வகையுஞ் சொன்னா
னச்சுதப்பிள் ளைக்குமந்த வாண்டவரே புத்திசொன்னா ராதலாலே
துர்ச்சனப்பிள் ளைக்கூரார் புத்திசொல்லு வாறென்றே சொல்லு வாரே. (16)

கொச்சையிற்பிள்ளை—திருஞானசம்பந்தமூர்த்திநாயனார். கொச்சை யென்பது சீகாழித்தலத்திற் கொருபெயர். கொடி—காக்கை. வச்சிரன் பிள்ளை—இந்திரன்மகன். இங்கு மாதவனென்றது இராமபிரானை. அச்சுதப்பிள்ளை—விட்டுணு. 'துர்ச்சனப்பிள்ளைக்கு ஊரார் புத்திசொல்லுவர்' என்பது பழமொழி.

வச்சிரன்பிள்ளைக்கு மாதவன் புத்திசொல்லியது:—இராமபிரான் வனவாசஞ்செய்து வருங்காலத்து ஒருநாள், சீதாபிராட்டியின் வடிவழகைக்கண்டு மயங்கிய இந்திரன்மகன், காகவடிவமெடுத்துவந்து பிராட்டியின் தனதடங்களிற் றீண்ட, அதையறிந்த இராமபிரான் கோபித்து ஒருபுல்லை மந்திரித்து அம்பாகப் பிரயோகிக்க அது அவனைக்கொல்ல நெருங்கிற்று. அவன் இந்திரன்முதலிய தேவர்களிடஞ் சென்று ஒருவருங் காப்பாரிலாமையால், இராமபிரானிடமே சரண்புக்கனன். கருணைக் கடலாகிய இராமபிரான் அவன்செய்த குற்றமானது எளிதில்மன்னித்து விடக்கூடிய சிறியகுற்றமல்லவாதலாலும், தான் எய்த அம்பு வீண்படாதாதலாலும் அவனுடைய ஒற்றைக்கண்ணொளியை அம்புக் கிலக்காக்கி, அவன் காகவடிவெடுத்துவந்து குற்றஞ்செய்தமையால் மற்றைக்காகங்களுக்கும் ஒற்றைக் கண்ணொளி கெடச்செய்து அவனுக்கும் நற்புத்தி புகட்டியனுப்பினர் என்பது சரிதம்.

அச்சுதப்பிள்ளைக்கு முன மாண்டவரே புத்திசொன்னாரென்பது:— போரிலே திருமாலுக்குப் பயந்த அசுரர், பிருகுமுனிவருடைய ஆச்சிரமத்தில்வந்து அம்முனிவர்மனைவி கியாதியினிடம் அடைக்கலம்புக, அவள் பாதுகாத்தனள். அதுகண்ட திருமால் அவளைக்கொன்றுவிட, முனிவர் கோபித்துத் திருமாலுக்குப் பத்தவதாரமுண்டாகச் சபித்தார்.

உடனே திருமா லச்சாபநீங்கக் காஞ்சியிற் சிவலிங்கபூசைசெய்ய, சிவபிரான் காட்சிதந்து திருமாலே? நம்மடியவர்க்குத் தீங்கியற்றினரைத் தண்டிப்பதே தருமம்; நம்மடியவர் எதைக்குறித்து என்னசொன்னாலுந் தவறமாட்டாது. நினக்குக் கூறிய சாபமும் பலிக்குமேயன்றித் தவறாது. எம்மை வழிபடுந்தன்மையால், நீ கொள்ளுந் தசாவதாரமு முலகினுக்குபகாரமாகு"மென்று புத்திகூறி விடுத்தருளினர். காஞ்சிப்புராணம் அரிசாபபயந்தீர்த்ததானப்படலத்திலறிக.

கறுத்தவிட முண்டருளுந் தண்டலையார் வளநாட்டிற் கடிய தீயோர்
குறித்துமனை யாளரையிற் றுகிலுரிந்து மைவர்மனங் கோபித் தாரோ
பறித்துரிய பொருண்முழுதுங் கவர்ந்தாலு மடித்தாலும் பழிசெய் தாலும்
பொறுத்தவரே யரசாள்வார் பொங்கினவர் காடுறைந்து போவர் தாமே. (17)

தீயோர்—துரியோதனாதியர்கள். மனையாள்—திரௌபதி. ஐவர்—பாண்டவர்கள். திரௌபதியைத் துகிலுரிந்த கதையைப் பாரதம் சபாபருவத்தி லறிக. "பொறுத்தார் அரசாள்வார் பொங்கினர்காடுறைவார்" என்பது பழமொழி.

அள்ளித்தெண் ணீறணியுந் தண்டலையார் வளநாட்டி லாண்மை யுள்ளோர்
விள்ளுற்ற கல்வியுள்ளோர் செல்வமுள்ளோ ரழகுடையோர் மேன்மை நோக்கி
யுள்ளத்தி லழன்றழன்று நமக்கில்லை யெனவுரைத்திங் குழல்வா ரெல்லாம்
பிள்ளைப்பெற் றவர்தமைப்பார்த் திருந்துபெரு மூச்செறியும் பெற்றி யோரே(18)

"பிள்ளைபெற்றவளைப்பார்த்து பெருமூச்சுவிட்டாவதென்ன" என்பது பழமொழி.

மண்ணுலகாளவுவினைப்பார்பிறர்பொருண்மேலாசைவைப்பார்வலிமைசெய்வார்
புண்ணியமென் பதைச்செய்யார் கடைமுறையி லலக்கழிந்து புரண்டே போவார்
பண்ணுலவு மொழிபாகர் தண்டலையார் வகுத்தவிதிப் படியல் லாம
லெண்ணமெல்லாம் பொய்யாகு மௌனமே மெய்யாகு மியற்கை தானே. (19)

'எண்ணமெலாம் பொய்யாம் மௌனமாயிருப்பது மெய்யாம்' என்பதுலகர் பழமொழி.

சொன்னத்தைச் சொல்லுமிளங் கிள்ளையென்பார் தண்டலையார் தொண்டு பேணி
யின்னத்துக்கின்னதெனும் பகுத்தறிவொன் றில்லாத வீன ரெல்லாந்
தன்னெத்துக் கண்டவுடன் காணுமன் முறைபேசிச் சாடை பேசி
முன்னுக்கொன் றாயிருந்து பின்னுக்கொன் றாய்நடந்து மொழிவர் தாமே. (20)

கிள்ளை—கிளி. முன்சொன்னதையே பின்னுஞ் சொல்வது கிளியியல்பு. வேறொன்று சொல்லாது. சொன்னதைச் சொல்லுங் கிளிப்பிள்ளையென்ப தறிக. 'முன்னுக்கொன்றாயிருந்துபேசிப் பின்னுக்கொன்றாகப் பேசுவார்முகத்தில் விழிக்கப்படாது' என்ப துலகர் பழமொழி.

கொடியருக்கு நல்லபுத்தி சொன்னாலுந் தெரியாது கொடையில் லாத
மடையருக்கு மதுரகவி யுரைத்தாலு மவர்கொடுக்க மாட்டார் கண்டீர்
படியளக்குந் தண்டலைநீ ணெறியாரே யுலகமெலாம் பரவி மூடி
விடியமட்டு மழைபெயினு மதினோட்டாங் கிளிஞ்சின்முளை வீசிடாதே. (21)

விடியுமட்டு மழைபெய்தாலு ஓட்டாங்கிளிஞ்சில் முளைக்கமாட்டாது என்பது பழமொழி. ஓட்டாங்கிளிஞ்சில்—ஓட்டைப்போலிருக்கிற கிளிஞ்சிலென்க.

செங்காவி மலர்த்தடஞ்சூழ் தண்டலைநீ ணெறியெயின் செயலுண் டாகி
லெங்காகி லென்னவவ ரெண்ணியவெல் லாமுடியு மில்லை யாகிற்
பொங்காழி சூழுலகி லுள்ளங்கால் வெள்ளெலும்பாய்ப் போக வோடி
யைங்காதம் போனாலுந் தன்பாவந் தன்னுடனே யாகுந் தானே. (22)

'ஐங்காதம் போனாலுந் தன்பாவந் தன்னைவிட்டு நீங்காது' என்பது பழமொழி.

தாயறிவாண் மகளருமை தண்டலைநீ ணெறிநாதர் தாமே தந்தை
யாயறிவா ரெமதருமை பரவையிடந் தூதுசென்ற தறிந்தி டாரோ
பேயறிவார் முழுமூடர் தமிழருமை யறிவாரோ பேசு வாரோ
நாயறியா தொருசந்திச் சட்டிபா னையினந்த ஞாயந் தானே. (23)

"பரவையிடந் தூதுசென்ற தறிந்திடாரோ" என்பதற்கு அந்நாதர், சுந்தரமூர்த்திநாயனார்தமிழ்ப்பாட்டினருமைகருதிஅந்நாயனார்க்குத் திருவாரூரிற் பரவைநாச்சியாரைச்சேர்த்துவைக்கும்படியாகத்தூது போனதை யுலகினரறியாரோ? என விரித்துரைத்துக்கொள்க. இக்கதையைப் பெரியபுராணம் ஏயர்கோன்கலிக்காமநாயனார்புராணத்தில் ௩௧௬-ம் கவிமுதல், ௩௭௬-ம் கவிவரை காண்க. 'நாய்க்குத்தெரியுமோ வொருசந்திப்பானை' என்பது பழமொழி.

கட்டுமாங் கனிவாழைக் கனிபலவின் கனிகளுப கார மாகுஞ்
சிட்டருமவ் வணந்தேடும் பொருளையெல்லா மிரப்பவர்க்கே செலுத்தி வாழ்வார்
மட்டுலவுஞ் சடையாரே தண்டலையா ரேசொன்னேன் வனங்க டோறு
மெட்டிமரம் பழுத்தாலு மீயாதார் வாழ்ந்தாலு மென்னுண் டாமே. (24)

சிட்டர்-உயர்ந்தோர். 'எட்டிபழுத்தென்ன, ஈயாதார் வாழ்ந்தென்ன'? என்பது பழமொழி. மட்டு-தேன். எட்டி-காஞ்சிரமரம்.

ஓதரிய தண்டலையா ரடிபணிந்து நல்லவனென் றுலக மெல்லாம்
போதமிகும் பேருடனே புகழ்படைத்து வாழ்பவனே புருட னல்லா
லீதலுடனிரக்கமின்றிப் பொன்காத்த பூதமென விருந்தா லென்ன
காதவழி பேரில்லான் கழுதையோ டொக்குமெனக் காண லாமே. (25)

'காதவழி பேரில்லான் கழுதைக்கொப்பாவான்' என்பதுலகர் பழமொழி.

பரியாம விடுஞ்சோறு மூமைகண்ட கனவும்போற் பரிசி லீயா
னரிதான செந்தமிழி னருள்சிறிது மில்லாதா னறியு மோதான்
கரிகாலன் பூசைபுரி தண்டலைநீ ணெறியாரே கதித்த வோசை
தெரியாத செவிடன்கா தினிற்சங்கு குறித்ததெனச் செப்ப லாமே. (26)

அறியுமோ—செந்தமிழை யுரைத்தா லறிவனோ வென்க. கரிகாலன்—ஒருசோழன். பரியாமல்—அன்பில்லாமல். 'செவிடன்காதிற் சங்கூதினது போலாம்' என்பது பழமொழி.

முன்னரிய மறைவழக்குந் தண்டலையா ராகமத்தின் மொழிகே ளாமற்
பின்னுயிரை வதைத்தவனுங் கொன்றவனுங் குறைத்தவனும் பெற்று ளோனு
மன்னெறியே சமைத்தவனு முண்டவனு நரகுறுவ ராத லாலே
தன்னுயிர்போ லெந்நாளு மன்னுயிருக் கிரங்குவதுந் தக்க தாமே. (27)

அன்னெறி—நெறியல்லாநெறி. 'தன்னுயிர்போல மன்னுயிர்க்கிரங்க வேண்டும்' என்பது பழமொழி.

உருவெடுத்த நாண்முதலா வொருசாணும் வளர்க்கவுட லுழல்வ தல்லான்
மருவிருக்கு நின்பாத மலர்தேடித் தினம்பணிய மாட்டே னந்தோ
திருவிளக்கு மணிமாடத் தண்டலைநீ ணெறியேயென் செய்தி யெல்லாஞ்
சருகரிக்க நேரமன்றிக் குளிர்காய நேரமில்லாத் தன்மை தானே. (28)

'சருகரிக்க நேரமன்றிக் குளிர்காய நேரமில்லை' என்பது பழமொழி. சாண் என்றது ஈண்டுச் சாணளவுகொண்டவயிற்றைக்குறித்து நின்றது.

காதிலே திருவேடங் கையிலே செபமாலை கழுத்தின் மார்பின்
மீதிலே தாழ்வடங்கண் மனதிலே காவடமாம் வேட மாமோ
வாதிலே யயன்றேடுந் தண்டலைநீ ணெறியாரே மனிதர் காணும்
போதிலே மவுனமிராப் போதிலே ருத்ராக்கப் பூனை தானே. (29)

காவடம்-கள்ளம். 'உருத்திராக்கப்பூனைபோலிருக்கிறு' னென்ப துலகர் பழமொழி. பூனைக்குருத்திராக்கத்தைக் கழுத்திற்கட்டியிருந்தா லது கொலைசெய்யாதிருக்குமோ? வழக்கப்படி கொலைசெய்யுமென் றறிக.

மானென்று வடிவெடுத்து மாரீசன் போய்மடிந்தான் மானே யென்று
தேனென்று மொழிபேசிச் சீதைதனைச் சிறையிருக்கத் திருடிச் சென்றோன்
வானென்று மரசிழந்தான் றண்டலையார் திருவுளத்தின் மகிமை காணீர்
தானென்று நினைக்கையிலே தெய்வமொன்று நினைப்பதுவுஞ் சகசந் தானே. (30)

சீதாபிராட்டியை மயக்கநினைத்துச்சென்ற மாரீசன், இராமபிரானம்பா லிறந்தான். இக்கதை இராமாயணம் ஆரணியகாண்டம் மாரீசன் வதைப்படலத்தி லறிக. திருடிச்சென்றோன்-இராவணன். 'தானென்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்தது' என்பது பழமொழி. சகசம்-இயல்பு.

கைசொல்லும் பனைகாட்டுங் களிற்றுரியார் தண்டலையார்க் காணுர் போலப்
பொய்சொல்லும் வாயினர்க்குப் போசனமுங் கிடையாது பொருணில்லாது
மைசொல்லுங் காரளிசூழ் தாழைமலர் பொய்சொல்லி வாழ்ந்த துண்டோ
மெய்சொல்லி வாழாதான் பொய்சொல்லி வாழ்வதில்லை மெய்மைதானே. (31)

யானைகைக்குப் பனை யுவமானமென்க.

தாழைமலர் போய்சோன்னதாவது:-பிரம விட்டுணுக்களிருவரும், நானேபெரியவன் நானேபெரியவனென வாதிட்டுப்போர்செய்யும்போது, அப்பகையை நீக்கச்சிவபிரா னக்கினிமலையா யெழுந்து நிற்க, இருவரும் இதனடிமுடியைக் கண்டவரே பெரியவரென்று பிரமதேவர் அன்னமாய் முடியையும், விட்டுணுமூர்த்தி பன்றியா யடியையுந் தேடச்சென்றார்கள். விட்டுணுமூர்த்தி யடி காணுறாது வந்துநின்றார். பிரமதேவர் முடிகாணாது வருந்திவரும்போது, சிவபிரான் றிருமுடியிலிருந்து ஒரு தாழம்பூ, கீழே வீழ்ந்துவந்தது. பிரமதேவர் அதனைக்கண்டு திருமுடியைத் தாங் கண்டதாகப் பொய்சொல்லும்படி வேண்ட, அத் தாழம்பூவும் அவ்வாறே வந்து சொல்லியது. சிவபிரா னுடனே தாழம்பூவைநோக்கி இனி நமக் கணிதற்காகா யென்று நீக்கி விட்டார். அருணசல புராணம் திருமலைச்சருக்கத்திற் காண்க. 'மெய்சொல்லி வாழாதான் பொய்சொல்லி வாழ்வனோ'? என்பதுபழமொழி.

அந்தணரை நல்லவரைப் பரமசிவ னடியவரை யகந்தை யாலோர்
நிந்தனைசொன் னூலுமென்ன வைதாலு மென்னவதி னிடேத முண்டோ
சுந்தரர்க்குத் தூதுசென்ற தண்டலைநீ ணெறியாரே துலங்கும் பூர்ண
சந்திரனைப் பார்த்துநின்று நாய்குரைத்த போதிலென்ன தாழ்ச்சி தானே. (32)

'நிஷேதம்—தள்ளப்படுவது என்க. 'சந்திரனைப்பார்த்து நாய்குரைத் தாலாவதென்ன'? என்பது பழமொழி.

கோடாமற் பெரியவர்பா னடப்பதன்றிக் குற்றமுடன் குறைசெய் தோர்க
ளாடாகிக் கிடந்தவிடத் ததன்மயிருங் கிடவாம லழிந்து போவார்
வீடாநற் கதியுதவுந் தண்டலையா ரேசொன்னேன் மெய்யோ பொய்யோ
கோடாலிக் காம்பேதன் குலத்தினுக்குக் கேடான கொள்கை தானே. (33)

கோடாமல்—கோணாமல். ஆடாகி—ஆட்டுச்சென்மமாகி. 'கோடாலிக் காம்பு குலத்துக்கீனம்' என்பது பழமொழி. மரக்கிளையாகிய கோடா லிக்காம்பே தன்னினமாகிய மரத்தைவெட்டுதற்குதவியாயிருத்தல் காண்க.

சின்னமெங்கே கொம்பெங்கே சிவிகையெங்கே பரியெங்கே சிவியா ரெங்கே
பின்னையொரு பாழுமில்லை நடக்கைகுலைந் தாலுடனே பேயே யன்றோ
சொன்னவிலுந் தண்டலையார் வளநாட்டிற் குங்குலியத் தூபங் காட்டுஞ்
சன்னதமா னதுகுலைந்தாற் கும்பிடெங்கே வம்பரிது தனையெண் ணூரே. (34)

சிவியார்—ஓர்சாதியார். இவர் பல்லக்குச்சுமப்பவரெனக் கொள்ளல் வேண்டும். 'சன்னதங்குலைந்தாற் கும்பிடெங்கேகிடைக்கும்' என்பது பழமொழி. நடக்கை—நல்லொழுக்கம்.

சிறுபிறைதுன் னியசடையார் தண்டலைசூழ் பொன்னிவளஞ் செழித்த நாட்டிற்
குறையகலும் பெருவாழ்வு மைந்தருமக் களும்பொருட்டாக் குறித்தி டாமன்
மறைபயில்பத் திரகிரியும் பட்டினத்துப் பிள்ளையுஞ்சேர் மகிமை யாலே
துறவறமே பெரிதாகுந் துறவிக்கு வேந்தனொரு துரும்பு தானே. (35)

பத்திரகிரி—இவர் ஓரரசர், பட்டினத்தடிகளுடன் றுறவுபூண்டு அவ்வடிகளருள் பெற்றவர்; 'துறவிக்கு வேந்தன் றுரும்பு' என்பது பழமொழி. "போர்த வுதாரனுக்குப் பொன் றுரும்பு வீரருக்குச்—சேர்ந்த மரணஞ் சிறு துரும்பா—மாய்ந்த—வறிவோர்க்கு நாரி யருந்துரும்பா மில் லத்—துறவிக்கு வேந்தன் றுரும்பு" என்று ஔவையாருங் கூறிய தறிக.

பேரிசைக்குஞ் சுற்றமுடன் மைந்தருமா தருஞ்சூழப் பிரபஞ் சத்தே
பாரியையுற் றிருந்தாலுந் திருநீற்றிற் கழற்காய்போற் பற்றில் லாமற்
சீரிசைக்குந் தண்டலையா ரஞ்செழுத்தை நினைக்கின்முத்தி சேர லாகு
மாரியக்கூத் தாடுகினுங் காரியமேற் கண்ணாவ தறிவு தானே. (36)

பாரி—மனையாள். 'ஆரியக் கூத்தாடினாலும் காரியத்திலே கண்ணாகி யிருக்கவேணும்' என்பது பழமொழி. அஞ்செழுத்து—சிவமூலமந்திரமாகிய பஞ்சாக்கரம்.

இரந்தனையித் தனைநாளும் பரந்தனைநா னென்றலைந்தா யினிமே லேனுங்
கரந்தைமதி சடையணியுந் தண்டலைநீ ணெறியாரே காப்பா ரென்று
முரந்தனைவைத் திருந்தபடி யிருந்தனையே லுள்ளவெலா முண்டா முண்மை
மரந்தனைவைத் தவர்நாளும் வாடாமற் றண்ணீரும் வார்ப்பர் தாமே. (37)

இரந்தனை — யாசித்தாய். பரந்தனை—பரம்பொருளை. உரம்—ஞானம், வலிமையுமாம். 'மரம்வைத்தவன் தண்ணீர்விடுவான்' என்பது பழமொழி. இக்கவி தன்மனத்தைநோக்கிக்கூறிய தென்க.

நாற்கவியும் புகழவருந் தண்டலையார் வளநாட்டி னல்ல நீதி
மார்க்கமுட னடந்துசெங்கோல் வழுவாமற் புவியாளும் வண்மை செய்த
தீர்க்கமுள்ள வரசனையே தெய்வமென்பார் கொடுங்கோன்மை செலுத்தி நின்ற
மூர்க்கமுள்ள வரசனுந்தன் மந்திரியு மாழ்நரகின் மூழ்கு வாரே. (38)

நாற்கவி—கவி, கமகன், வாதி, வாக்கி, என நான்குவகைப் புலவர்கள். 'நீதிமன்ன னிலத்துக்குத் தெய்வம்' என்பதுலகர்பழமொழி. "குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற—புதல்வர்க்குத் தந்தையுந் தாயு—மறவோர்க்—கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வ—மிலைமுகப் பைம்பூ ணிறை" என நீதிநெறிவிளக்கத்தினுங் காண்க.

ஓதரிய வித்தைவந்தா லுரியசபைக் கழகாகு முலகில் யார்க்கு
மீதலுட னறிவுவந்தா லினியகுணங் களுக்கழகா யிருக்கு மன்று
நீதிபெறு தண்டலையார் திருநீறு மெய்க்கழகாய் நிறைந்து தோன்றுங்
காதிலணி கடுக்கனிட்டான் முகத்தினுக்கே யழகாகிக் காணுந் தானே. (39)

'காதுக்கணியிட்டால் முகத்திற் கழகாகும்' என்ப துலகர் பழமொழி.

பாரதியா ரண்ணாவி புலவரென்பார் கல்வியினிற் பழக்க மில்லார்
சீரறியார் தலையறியார் பல்லக்கே றவர்புலமை செலுத்திக் கொள்வா

ராரணியுந் தண்டலைநீ ணெறியாரே யிலக்கணநூ லறியா ரேனுங்
காரிகையா கிலுங்கற்றுக் கவிசொல்லார் பேரிகொட்டக் கடவர் தாமே. (40)

ஆர்—ஆத்திப்பூ. 'காரிகை கற்றுக் கவிசொல்ல மாட்டார் பேரிகை தட்டிப்பிழைப்பது நன்று' என்பது பழமொழி.

அருண்மிகுந்த வாகமநூல் படித்தறியார் கேள்வியையு மறியார் முன்னே
யிருவினையின் பயனறியார் குருக்களென்றே யுபதேச மெவர்க்குஞ் செய்வார்
வரமிகுத்த தண்டலைநீ ணெறியாரே யவர்கிரியா மார்க்க மெலாங்
குருடனுக்குக் குருடன்கோல் கொடுத்துவழி காட்டிவருங் கொள்கை தானே. (41)

'குருடனுக்குக் குருடன் வழிகாட்டினதுபோல என்பது பழமொழி.

நேற்றுள்ளா ரின்றிருக்கை நிச்சயமோ வாதலினு னினைந்த போதே
யூற்றுள்ள பொருளுதவி யறந்தேடி வைப்பதறி வுடைமை யன்றோ
கூற்றுள்ள மலையவருந் தண்டலையா ரேசொன்னேன் குடபால் வீசுங்
காற்றுள்ள போதெவருந் தூற்றிக்கொள் வதுநல்ல கருமந் தானே. (42)

கூற்று—இயமன். 'காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்' என்பது பழமொழி.

வர்க்கத்தார் தமைவெறுத்த விருத்தருமாய் மெய்ஞ்ஞான வடிவ மானோர்
கற்கட்டா கியமடமுங் காணியுஞ்செம் பொனுந்தேடுங் கரும மெல்லாம்
பொற்கொத்தாஞ்செந்நெல்வயற்றண்டலையாரேசொன்னேன்பொன்னுடாகுஞ்
சொற்கத்தே போம்போதுங் கக்கத்தே ராட்டினத்தைச் சுமந்த வாறே. (43)

வர்க்கத்தார் என்றது சுற்றத்தாரை. காணி—நிலம். 'சொர்க்கத்திற்குப் போகிறவள் கக்கத்திலே இராட்டினத்தை யெடுத்ததுபோலிருக்கிறது, என்ப துலகர் பழமொழி. இது அருகிவழங்குகிறது. கக்கம்—கையடியின் கீழ்ப்பக்கம். இராட்டினம்—நூல்நூற்குங் கருவி.

ஆம்பிள்ளா யெனக்கொடுக்கும் பெரியோரை யடுத்தவர்க ளவனிக் கெல்லா
நாம்பிள்ளா யதிகமென்பார் நண்ணூரு மேவல்செய நாளும் வாழ்வார்
வான்பிள்ளா யெனுமேனித் தண்டலையார் பூடணமாய் வளர்ந்த நாக
மேன்பிள்ளாய் கருடாநீ சுகமோவென் றுரைத்தவித மென்ன லாமே. (44)

பிள்ளையென்னும் பதம் விளிக்கும்போது பிள்ளாய் என வரும். நண்ணார்—புகைவர். வான்பிள்ளாயெனுமேனி—பரமாகாயத்தினின்றும் விலகாய் என்னுந் திருவுருவத்தையுடைய. பூடணம்—ஆபரணம்.

நாகம், கருடா? சுகமா எனக் கேட்டதாவது—கருடனுக்குப்பயந்து நாகங்கள் காஞ்சியிற் சிவலிங்கப்பதிட்டைசெய்து பூசித்து வேண்டச் சிவபிரான் அந்நாகங்களை ஆபரணமாகப் பூண்டார். ஓர்காலத்தில் திருமாலைத் தாங்கிவந்தகருடனை, நாகங்கள்பார்த்து, "தன்னுவெம்பகைக் கலுழனைக் கலுழனே சுகங்கொலென் றஞ்சமே—பன்னி மேன்மையின் வினயின விம்மொழி பாரெலாமெடுத் தேத்தும்" என்பதனு லறிக. (காஞ்சிப்புராணம் பணாதரீச்சரப்படலம்.)

வடியிட்ட புல்லர்தமை யடுத்தாலும் விடிவதுண்டோ மலிநீர்க் கங்கை
முடியிட்ட தண்டலைநா தரைப்புகழிற் பெருவாழ்வு முழுது முண்டா
மிடியிட்ட வினைதீர்க்குந் தெய்வ மிட்டு விடியாமல் வீணர் வாயிற்
படியிட்டு விடிவதுண்டோ வவருளே கண்ணுகப் பற்று வீரே. (45)

வடியிட்ட புல்லர்—தெளித்தெடுத்தபுல்லர். விடிதல்—ஈண்டு வறுமை தொலைதலென்க. மிடி—தரித்திரம். தெய்வமிட்டு—தெய்வங்கொடுத்து. படியிட்டு—படிகொடுத்து. 'ஆருக் காரிட்டுவிடியுந் தெய்வமிட்டால் விடியும்' என்ப துலகர் பழமொழி.

பொலியவளம் பலதழைத்த தண்டலைநீ ணெறிபாதம் போற்றி நாளும்
வலியவறஞ் செய்தறியீர் மறஞ்செய்வீர் நமன்றூதர் வந்து கூடி
மெலியவறைந் திடும்பொழுது கலக்கண்ணீ ருகுத்தாலும் விடுவ துண்டோ
வெலியழுது புலம்பிடினும் பூனைபிடித் ததுவிடுமோ வென்செய் வீரே. (46)

மறம்—பாவம். 'எலியழுது புலம்பினும் பூனைபிடித்தது விடாது' என்பது பழமொழி.

மற்றவரோ தமிழ்பாடி நாட்டவல்லார் நக்கீரர் வலிய ராகி
வெற்றிபுனை மீனாட்சி சுந்தரநா யகரடுத்து விளம்பும் போதிற்
பற்றுளதண் டலைவாழுங் கடவுளென்றும் பாராமற் பயப்ப டாம
னெற்றிவிழி காட்டுகினுங் குற்றமே குற்றமென நிறுத்தினரே. (47)

நக்கீரர்—கடைச்சங்கப்புலவர்.

நெற்றிவிழிகாட்டுகினுங் குற்றம் குற்றமேயென நிறுத்தியது:-சொக்கநாதருக்குச் சண்பகமாலைசாத்தும் பணிசெய்கிற காரணத்தாற் சண்பகமாறனெனனும் பெயர்பெற்ற வங்கியசூடாமணிப்பாண்டியன், வசந்தகாலத்தின் மனையாளுடன் சோலையிலிருக்கும்போது ஒரு வாசனையுண்டாக, இது மலர்வாசமன்று, மனையாள்கூந்தலிலுள்ளவாசனை யென்று

தெரிந்துகொண்டு, "என்மனத்திற் கருதியதை யுரைத்தவர்கள், இதை யெடுத்துககொள்க வென்று சங்கத்தார்சபையி லொருபொற்கிழிகட்டித் தூக்கினன். அப்போது தருமியென்னும் பிரமசாரி தனக்கு விவாகஞ் செய்வதற்காகச் சுவாமியைவேண்டச் சுவாமி, "கொங்குதேர் வாழ்க்கை' யென்னும் முதற்குறிப்புள்ளபாடலை யெழுதிக்கொடுத்தார். அப்பாடலைத் தருமி சங்கத்திற் கொடுத்துப் பொற்கிழியறுக்கப் புகும்போது, நக்கீரர், கவியிற் குற்றமுளதென்று தடைசெய்தார்; உடனே தருமி சுவாமியிடஞ் சென்று விண்ணப்பஞ்செய்யச் சுவாமி யொருபுலவருருக்கொண்டுவந்து நங்கவிக்குக் குற்றங் கூறினர் யாவரென்று வினவக் கீரனர் நானேயெனக் கூறினர். சுவாமி குற்றமென்னவென்றார்; கீரனர் கூந்தலுக் கியற்கைவாசனையுண்டெனக் கூறியிருக்கிறது; அதற்குச் செயற்கைவாசனையன்றி யியற்கைவாசனை யில்லை யெனறார். சுவாமி, பதுமினியாகிய முதற்சாதிப்பெண்கள்கூந்தலுக் குண்டே யென்றார்; நக்கீரர் அதற்கு மில்லை யென்றார். சுவாமி, தேவமங்கையர் கூந்தலோ வென்றார்; நக்கீரர், அதற்கும், கற்பகமாலையணிந்த செயற்கையாலே மணமுண்டாமன்றி யியற்கைவாசனையில்லை யென்றார். சுவாமி, நீர்வழிபடுங் காளத்தி ஞானப்பூங்கோதையார்கூந்தலோ வென்றார். நக்கீரர் அதுவுமங்ஙனமே யென்றார். சுவாமி, தன்னை யின்னரென்று தெரிவித்தற்காக நெற்றிக்கண்ணைக் காட்டினர்; நக்கீரர், நெற்றிக்கண்காட்டினுலுங் குற்றங் குற்றமே யென்றார். திருவிளையாடற்புராணம், தருமிக்குப் பொற்கிழியளித்தபடலத்திற் காண்க.

சீரிலகுந் தண்டலையார் திருவருளா லகமேறிச் செழித்த நாளிற்
பாரியென வாயிரம்பேர்க் கன்னதா னங்கொடுக்கும் பலனைப் பார்க்க
நேரிடும்பஞ் சந்தனிலே யெவ்வளவா கிலுங்கொடுத்தா லீதி யாகு
மாரிபதின் கலநீரிற் கோடைதனி லொருகுடநீர் வண்மை தானே. (48)

அஃகம் என்பதை அகமெனக்கூறினர். அது தானியமென்க. 'மழைக்காலத்திற் பதின்கலநீர்வார்ப்பதினுங் கோடைகாலத்தி லொருகுடநீர்வார்த்தாற்போதும்' என்பது உலகர்பழமொழி.

பிறக்கும்போ தொருபொருளுங் கொடுவந்த தில்லையியுர் பிறந்து மண்மே
லிறக்கும்போ திலுங்கொண்டு போவதில்லை யென்றுசும்மா விருந்து வீணே
சிறக்குந்தா யினுமருள்வார் தண்டலையிற் சேராமற் றேச மெல்லாம்
பறக்குங்கா கமதிருக்குங் கொம்பறியா தெனத்திரிந்தோர் பயன்பெறுரே. (49)

'பறக்குங்காக மிருக்கும்கொம்பறியாது' என்பது பழமொழி. முன்னிரண்டடியின் கருத்தைப் "பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை பிறந்து மண்மேலிறக்கும் பொழுது கொடுபோவ தில்லை" எனப் பட்டினத் தடிகள் திருவாக்கினுங் காண்க.

வைதிடினும் வாழ்த்திடினு மின்பதுன்பம் வந்திடினும் வம்பு கோடி
செய்திடினுந் தண்டலைநீ ணெறியார்தஞ் செயலென்றே தெளிவ தல்லான்
மெய்தவிர வவர்செய்தா ரிவர்செய்தா ரெனநாடி வெறுக்க லாமோ
வெய்தவர்தம் மருகிருக்க வம்பைநொந்த கருமமென்ன வியம்பு வீரே. (50)

'எய்தாரிருக்க அம்பை நொந்தாவ தென்ன' என்பது பழமொழி.

வாங்கால முண்டசெழுந் தண்டலையா ரடிபோற்றி வணங்கி நாடிப்
போங்காலம் வருமுன்னே புண்ணியஞ்செய் தரியகதி பொருந்து மும
லாங்கால முள்ளவெலாம் விபசார மாகியறி வழிந்து வீணே
சாங்காலஞ் சங்கரா சங்கரா வெனின்வருமோ தருமந்தானே. (51)

'ஆங்கால மவிசாரியாடிச் சாங்காலஞ் சங்கராவென்கிறுள்' என்பது பழமொழி.

சுற்றமாய் நெருங்கியுள்ளார் தனையடைந்தார் கற்றறிந்தார் துணைவே தில்லா
ருற்றவே தியர்பெரியோர்க் குதவியன்றிப் பிறர்க்குதவு முதவி யெல்லாஞ்
சொற்றநான் மறைபரவுந் தண்டலையா ரேசொன்னேன் சுமந்தே நொந்து
பெற்றதாய் பசித்திருக்கப் பிராமணபோ சனநடத்தும் பெருமை தானே. (52)

'பெற்றதாய் பசித்திருக்கப் பிராமணபோசனஞ் செய்ததுபோல்' என்பது பழமொழி.

துன்மார்க்கர்க் காயிரந்தான் சொன்னாலு மறந்துவிட்டுத் துடுக்கே செய்வார்
சன்மார்க்கர்க்கொருவார்த்தைசொலுமளவேமெய்யதனிற்றழும்பாக்கொள்வார்
பன்மார்க்க மறைபுகழுந் தண்டலையா ரேசொன்னேன் பதமே யான
நன்மாட்டுக் கோரடியா நற்பெண்டீர்க் கொருவார்த்தை நடத்தை யாமே. (53)

பதம்—பக்குவம். 'நன்மாட்டுக்கோரடி நற்பெண்டீர்க் கொருவார்த்தை' என்பது பழமொழி.

காப்பார்க்கு நல்லகதி வருவதில்லை செங்கோலிற் கடல்சூழ் வையம்
புரப்பார்க்கு முடிவிலே சுவர்க்கமல்லா னரகமில்லை பொய்யி தன்று
லூரப்பார்க்கு நலம்புரியுந் தண்டலையா ரேசொன்னே னொருமை யாக
விரப்பார்க்கு வெண்சோறு பஞ்சமுண்டோ வொருக்காலு மில்லை தானே. (54)

காப்பார்—இல்லையென்றுமறைப்பவர் 'இரப்பார்க்கு வெண்சோறு பஞ்சமா' என்பது பழமொழி.

படுங்கோல மறியாமற் றண்டலையார் திருப்பணிக்கும் பங்கஞ் செய்வார்
நெடுங்கோளுந் தண்டமுமா வீணைக வீணனைப்போ னீதி செய்வார்
கெடுங்கோப மல்லாமல் விளைவுண்டோ மழையுண்டோ கேள்வி யுண்டோ
கொடுங்கோன்மன் னவனாட்டிற் கடும்புலிவா ழுங்காடு குணமென் பாரே. (55)

வீணன் நீதி செலுத்தியது:—தஞ்சாவூர்ஸமஸ்தானத்திலே வேலைபெறக் காத்திருந்த வீணனென்பானொருவன், வேலைகிடையாமல் தானே யோசித்து மயானத்திற்குப்போகிறவழியிலிருந்துகொண்டு, அங்குவருகிற சவமொன்றுக்குப் பணமைந்து வாங்கும்படி இராசா உத்தரவென்று, நெடுநாள் வாங்கிச் சீவனம்பண்ணி மிகுந்தபணஞ் சேர்த்து வைத்திருந்தான். அரசன் ஒருநாளிரவு நகர்சோதனைக்குவரும்போது, ஒரு ஏழையின்வீட்டில் ஒரு பெண் "எனக்கொன்று மென்னுயகர் வைத்திறக்கவில்லையானாலும் வீணனுக்குப் பணங்கொடுப்பதற்கென்செய்வே" னென் றழுதாள். அரசன் இவ்விஷயமறிந்து வீணனென்பவன் யாரென்று, அவனை வரவழைத்து விசாரிக்கும்போது, அவ னிகழ்ந்ததையெடுத்துக்கூறி மிஞ்சியபணமிவ்வளவிருக்கிறது; "சனங்கட்குபகாரமாக வொருநதி வெட்டிவிடவேண்டுமென நினைத்திருக்கிறேன்" என்றான். அரசன் அவன்மூடச்செயலையுநற்செயலையும் வியந் தவ்வாறு செய்வாயெனப்போயினன். வீணன் காவேரியிலிருந்து பிரித்து ஒரு நதி வெட்டிவிட்டான். அது இன்றும் வீணனாறெனப் பெயர்பெற்று ஒரு பெருங்காலாகப் போய்க்கொண்டிருக்கிறது. 'கொடுங்கோன் மன்னர் வாழுநாட்டிற்—கடும்புலி வாழுங் காடு நன்றே' என்பது பழமொழி.

உள்ளவரைக் கெடுத்தோரு முதவியற்று வாழ்ந்தோரு முறைபெற் றோருந்
தள்ளிவழக் குரைத்தோருஞ் சற்குருவைப் பழிததோருஞ் சாய்ந்தே போவார்
பள்ளவயற் றண்டலையார் பத்தாடி பணிந்தோரும் பாடி னோரும்
பிள்ளைகளைப் பெற்றோரும் பிச்சையிட்ட நல்லோரும் பெருகு வாரே. (56)

உறை—பொருள். 'பிள்ளைகளைப் பெற்றோரும் பிச்சையிட்டநல்லோரும் பெருகிவாழ்வார்' என்பது பழமொழி.

விற்பனர்க்கு வாழ்வுவந்தான் மிகவணங்கிக் கண்ணோட்ட மிகவுஞ் செய்வார்
சொற்பருக்கு வாழ்வுவந்தாற் கண்டெரியா திறுமாந்து துன்பஞ் செய்வார்

பற்பலர்க்கு வாழ்வுதருந் தண்டலையா ரேசொன்னேன் பண்பில் லாத
வற்பருக்கு வாழ்வுவந்தா லர்த்தராத் திரிகுடைமே லாகுந் தானே. (57)

கண்ணோட்டம்–தாட்சணியம் 'அற்பனுக்கு வாழ்வுவந்தா லர்த்தராத்திரியுங் குடைபிடிப்பான்' என்பது பழமொழி.

விசையமிகுந் தண்டலையார் வளநாட்டி லொருத் தர்சொல்லே மெய்யா வெண்ணி
வசைபெருக வரியாயஞ் செய்துபிறர் பொருளையெல்லாம் வலிய வாங்கித்
திசைபெருகுங்கீர்த்தியென்றுந்தன்மமென்றுந்தானமென்றுஞ்செய்வதெல்லாம்
பசுவினையே வதைசெய்து செருப்பினைத்தா னங்கொடுக்கும் பண்பு தானே (58)

'பசுவைக்கொன்று செருப்பைத் தானம்பண்ணினதுபோலாம்' என்பது. பழமொழி

சிறியவரா முழுமூடர் துரைத்தனமா யுலகாளத் திறம்பெற் றாலு
மறிவுடையார் தங்களைப்போற் சற்குணமுள் ளுடையோர்க ளாக மாட்டார்
மறிதருமான் மழுவேந்துந் தண்டலையா ரேசொன்னேன் வாரி வாரிக்
குறுணிமைதா னிட்டாலுங் குறிவடிவங் கண்ணாகிக் குணங்கொ டாதே. (59)

'குறுணிமையிட்டாலும் குறிவடிவங் கண்ணுமா' என்ப துலகர் பழமொழி. இது அருகிவழங்குகிறது. குறிவடிவம்–கண்ணாகக் குறித்துச் செய்துவைத்த வடிவம்.

கற்றவர்க்குக் கோபமில்லை கடந்தவர்க்குச் சாதியில்லை கருணை கூர்ந்த
நற்றவர்க்கு விருப்பமில்லை நல்லவருக் கொருகாலு நரக மில்லை
கொற்றவருக் கடிமையில்லை தண்டலையார் மலர்ப்பாதங் கும்பிட் டேத்தப்
பெற்றவர்க்குப் பிறப்பில்லை பிச்சைச்சோற் றினுக்கில்லை பேச்சுத் தானே (60)

பிச்சைச் சோற்றினுக்கு மறுபேச்சில்லை' என்ப துலகர் பழமொழி. கொற்றவர்–அரசர். அடிமை–அடிமைத்தன்மை.

பரங்கருணை வடிவாகுந் தண்டலையார் வளநாட்டிற் பருவஞ் சேர்ந்த
சரங்குலவு காமகலை தனை யறிந்த வதிருப்த் தைய லாரை
வரம்புறுதா ளாண்மையில்லா மட்டிகளுக் கேகொடுத்தால் வாய்க்கு மோதான்
குரங்கினது கையினறும் பூமாலை தனைக்கொடுத்த கொள்கை தானே. (61)

சாங்குலவுகாமகலை–பாணம்விளங்கிய மன்மதனுடைய நூல் 'குரங்கின்கையிலே பூமாலைகொடுத்ததுபோல' என்பது பழமொழி.

பிரசமுண்டு வரிபாடுந் தண்டலையார் வளநாட்டிற் பெண்க ளோடு
சரசமுண்டு போகமுண்டு சங்கீத முண்டுசுகந் தானே யுண்டிங்
குரைசிறந்தவறுமையுண்டோவிடுக்கமுண்டோவொன்றுமில்லையுலகுக்கெல்லா
மரிசியுண்டேல் வரிசையுண்டா மக்காளுண் டாகின்மச்சா னன்புண் டாமே.(62)

'அக்காளுண்டானால் மச்சானுறவுண்டு' என்பது பழமொழி.

தத்தைமொழி யுமைசேருந் தண்டலையார் பொன்னிவளந் தழைத்த நாட்டில்
வித்தகமந் திரியில்லாச் சபைதனிலே நீதியில்லை வேந்தர்க் கெல்லாம்
புத்திநெறி நீதிசொல்லு மந்திரியல் லாதொருவர் போதிப் பாரோ
நித்தலுமுண் சோற்றின்முழுப் பூசனிக்காய் மறைத்ததுவு நிசம தாமே. (63)

'முழுப்பூசனிக்காயைச் சோற்றின்மறைத்தானென்றதுபோலிருக்கிறது' என்ப துலகர் பழமொழி.

நேசமுடன் சபையில்வந்தால் வேளையறிந் திங்கிதமா நிருபர் முன்னே
பேசுவதே யுசிதமல்லா னடுவிலொரு வன்குழறிப் பேச லெல்லாம்
வாசமிகுந் தண்டலைநீ ணெறியாரே யபிடேக மலிநீ ராட்டிப்
பூசைபண்ணும் வேளையிலே கரடியைவிட் டோட்டுவது போலுந் தானே. (64)

'சிவபூசைபண்ணும்வேளையிலே கரடியைவிட்டேவினதுபோலிருக்கிறது' என்பது பழமொழி.

மண்ணுலகிற் பிறர்குடியை வஞ்சனையிற் கெடுப்பதற்கு மனத்தி னாலே
யுன்னிடினு முரைத்திடினு மவன்றானே கெடுவனென்ப துண்மை யன்றோ
தென்னவன்சோ ழன்பணியுந் தண்டலைநீ ணெறியாரே தெரிந்து செய்யுந்
தன்வினைதன் னைச்சுடவோட் டப்பம்வீட் டைச்சுடவுந் தான்கண் டோமே.(65)

ஓட்டப்பம் வீட்டைச்சுட்டவரலாறு:—பட்டினத்தடிகள் தாம் துறவுபூண்டு மௌனமடைந்திருந்ததைக்கண்டு பொறாளாகிய தம் முன்பிறந்தவள் நஞ்சுகலந்த அப்பத்தைத் தமக்குக் கொடுக்க அதனை யறிந்துவாங்கி அவள்வீட்டின்மேற் சொருகிவைத்தார். அது அவள்வீட்டைச் சுட்டெரித்துவிட்டது. உடனே பட்டினத்தடிகள் 'தன்வினை தன்னைச்சுட ஓட்டப்பம் வீட்டைச் சுட்டது' எனக் கூறினர். இது பழமொழியாகப் பின் வழங்கிவரப்பட்டது.

முன்பெரியார் தொண்டுபட்டு நடந்தவழி தனைப்பழித்து முரணே பேசிப்
பின்பலரை யுடன்கூட்டி நூதனமா நடத்துவது பிழைபா டெய்திற்
றுன்பறியாக் கதியருளுந் தண்டலைநீ ணெறியாரே தூய னாகி
யுன்புளதா யைப்பழித்து மகளேதோ செயத்தொடங்கு மறிவு தானே. (66)

'தாயைப் பழித்து மகள் அவிசாரியாடினதுபோல' என்பது பழமொழி.

தண்ணமரு மலர்ச்சோலைத் தண்டலைநீ ணெறியேநின் றன்னைப் பாடி
லெண்ணமிக விம்மையிலு மறுமையிலும் வேண்டியதுண் டிதையோ ராமன்
மண்ணின்மிசை நரத்துதிகள் பண்ணியலைந் தேதிரிபா வாண ரெல்லாம்
வெண்ணெய்தம திடத்திருக்க நெய்தேடிக் கொண்டலையும் வீணர் தாமே. (67)

'வெண்ணெயிருக்க நெய்க்கலைவதுபோலிருக்கிறது' என்பது பழமொழி.

அந்தணர்க்குத் துணைவேத மரசருக்குத் துணைவயவா ளவனி மீது
மைந்தருக்குத் துணைதாயர் தூதருக்குத் துணைமதுர வார்த்தை யன்றோ
நந்தமக்குத் துணையான தண்டலைநீ ணெறியாரே நண்பரான
சுந்தரர்க்குத் துணைநாளு மேழையர்க்குத் தெய்வமே துணையென் பாரே. (68)

'ஏழைக்குத் தெய்வமே துணை' என்பது பழமொழி

போரஞ்சா ரதிவீரர் பொருளஞ்சார் விதாணஞ்சேர் புருடர் தோயு
நீரஞ்சார் மறைமுனிவர் நெருப்பஞ்சார் கற்புடைய நிறைசேர் மின்னார்
வாரஞ்சா முலையிடஞ்சேர் தண்டலையா ரேசொன்னேன் மதமா வென்னுங்
காரஞ்சா திளஞ்சிங்கங் கனத்தவலி யாந்தூதன் காலஞ் சானே. (69)

விதாணம்—கொடை. தூதன் காலுக் கஞ்சான்' என்பது அருகி வழங்கும் பழமொழி. காலுக்கு—காலின்வலிக்கு.

உபசாரஞ் செய்பவரை விலக்கிடினு மவர்செய்கை யொழிந்து போகா
தபசாரஞ் செய்வாரை யடித்தாலும் வைதாலு மதுநில் லாது
சுபசாரத் தண்டலையார் வளநாட்டிற் றிருடருக்கத் தொழி னில்லாது
விபசாரஞ் செய்வாரை மேனியெல்லாஞ் சுட்டாலும் விட்டி டாரே. (70)

'விபசாரஞ் செய்கிறவன் சுட்டாலும் விடமாட்டான்' என்ப துலகர் பழமொழி.

சகமிக்க தண்டலையா ரடிபோற்று மகராசர் சபையில் வந்தாற்
சுகமிக்க வேசையர்க்குப் பொன்னூறு கொடுப்பர்தமிழ் சொன்ன பேர்க்கோ
வகமிக்க சோறிடுவா ரந்தணருக் கெனினுழி யரிசி யீவார்
பகடிக்கோ பணம்பத்துத் திருப்பாட்டுக் கொருகாசு பாலிப் பாரே. (71)

'பகடி—வெளிவேடக்காரன். 'பகடிக்குப் பத்துப்பணம் கொடுப்பார் திருப்பாட்டுக்கு ஒருகாசு கொடுப்பார்' என்பது பழமொழி.

பணந்தானே யறிவாகும் பணந்தானே வித்தையுமாம் பரிந்து தேடும்
பணந்தானே குணமாகும் பணமில்லா தவர்பிணமாம் பான்மை சேர்வர்
பணந்தானே பேசுவிக்குந் தண்டலைநீ ணெறியாரே பார்மீ திற்றுன்
பணந்தானே பந்தியிலே குலந்தானே குப்பையிலே படுக்குந் தானே. (72)

'பணம் பந்தியிலே குலங் குப்பையிலே' என்பது பழமொழி.

புனங்காட்டு மண்ணும்விண்ணு மஞ்சவருங் காலனையும் போடா வென்றே
யினங்காட்டு மார்க்கண்டன் கடிந்துபதி ஞறுவய தென்றும் பெற்று
னனங்காட்டுந் தண்டலையா ரடியாரெல் லாமொருவர்க் கஞ்சு வாரோ
பனங்காட்டு நரிதானுஞ் சலசலப்புக் கொருநாளும் பயப்ப டாதே. (73)

இனம்-குலம். மார்க்கண்டன் என்றும் பதினறுவயது பெற்றது:- மார்க்கண்டமுனிவர் தமக்கு ஆயுண்முடிவுதெரிந்து திருக்கடவூரிலே சுவாமியைப் பூசித்துக்கொண்டிருக்க, அப்போது இயமன் வந்து பாசமிட்டிழுக்கச் சுவாமி அவனை யுதைத்துவீழ்த்தி முனிவருக் கென்றும் பதினறுவயதுடனிருக்க வரமருளினர். "அந்தணாளனுன்னடைக்கலம்புகுதவவனைக்காப்பதுபகாரணமாக – வந்தகாலன்றன்னுருயிரதனை வௌவினய்க்குன்றன்வண்மைகண்டடியேன்" எனச் சுந்தரமூர்த்தி நாயனர் தேவாரத்திற் காண்க. "பனங்காட்டு நரிதானுஞ் சலசலப்புக் கஞ்சாது' என்பது பழமொழி.

சீரிலகுந் தண்டலையார் வளநாட்டி லொருதோழன் றீமை தீர
வாரமிகும் பிள்ளைதனை யரிந்துண்டா னெருவேந்தன் மணந்து கொண்ட
வார்வமிகு மனைக்கிழத்தி யாண்டிச்சி வடிவுகொண்டா ளாத லாலே
யூரிலொரு வன்றேழ னருமற்ற தேதார முண்மை தானே. (74)

'ஊரிலொருவனே தோழன், ஆருமற்றதே தாரம்' என்பது பழமொழி. அற்றது-இல்லாதது. இதிலுள்ள கதைகள் வந்துழிக்காண்க.

தானவனு கியஞானச் செயலுடையார் மாதர்முலை தழுவி னலு
மானதொழில் வகைவகையாச் செய்தாலு மனுபோக மவர்பா லுண்டோ
கானுறையுந் தண்டலையா ரடிபோற்றுஞ் சுந்தரனர் காமி போலாய்
மேனவிலுஞ் சுகம்படுக்கை மெத்தையறி யாதெனவே விளம்பி னரே. (75)

'படுக்கைச்சுக மெத்தையறியாது' என்பது பழமொழி. இதனைச் சுந்தரர்கூறினரெனக் கூறியிருக்கின்றர். சுந்தரமூர்த்திநாயனர் தேவாரத்திலில்லை; இறந்து போனதேவாரத் துளதுபோலும்.

சோறென்ன செய்யுமெல்லாம் படைத்திடவே செய்யுமருள் சுரந்து காக்குஞ்
சோறென்ன செய்யுமெல்லா மழித்திடவே செய்யுமதன் சொரூப மாக்குஞ்
சோறென்ன வெளிதேயோ தண்டலையார் தம்பூசை துலங்கச் செய்யுஞ்
சோறென்னசெய்யுமெனிற்சொன்னவண்ணஞ்செயும்பழமைதோற்றுந்தானே.()

'சோறென்னசெய்யும் சொன்னவண்ணஞ்செய்யும்' என்பது பழமொழி.

எத்தருக்கு முலுத்தருக்கு மீனருக்கு மூடருக்கு மிரக்கம் பாரா
மத்தருக்குங் கொடிதாமவ் வக்குணமே நற்குணமா வாழ்ந்து போவார்
பத்தருக்கு நலங்காட்டுந் தண்டலையா ரேயறிவார் பழிப்பா ரேனும்
பித்தருக்குத் தங்குணமே நூலினுஞ்செம் மையதான பெற்றி யாமே. (77)

'பித்தருக்குத் தங்குண நூலினுஞ் செம்மை' என்பது பழமொழி. இதனைப் பெரியநாயகி கலித்துறையிலே "பித்தர்க்குத் தங்குண நூலினுஞ் செம்மை பெரியம்மையே" எனக் கூறியிருத்தல் காண்க.

பன்னகவே ணிப்பரமர் தண்டலையார் நாட்டிலுள பலருங் கேளீர்
தன்னறிவு தன்னினைவு தன்மகிமைக் கேற்றநடை தகுமே யல்லாற்
சின்னவரும் பெரியவர்போ லேநடந்தா லுள்ளதுபோஞ் சிறிய காக
மன்னநடை நடக்கப்போய்த் தன்னடையுங் கெட்டவகை யாகுந் தானே. (78)

"அன்னநடை நடக்கப்போய்க் காகந் தன்னடையு மிழந்ததுபோல" என்பது பழமொழி.

போரான கவிராய ருடன்சிறிய கவிகளும்ப்ர பந்தஞ் செய்வார்
வீராதி வீரருடன் கோழைகளும் வாள்பிடித்து விருது சொல்வார்
பாராளுந் தண்டலைநீ ணெறியாரே யிருவகையும் பகுத்துக் காணி
லாராயு மகதேவ ராடிடத்துப் பேய்களுநின் றாடு மாறே. (79)

விருது—வெற்றி. 'மகாதேவராடுமிடத்துப் பேயு மாடுகிறது' என்பது பழமொழி. சிவபிரானுக்குப் பேயோடாடியெனப் பெயருண்மையா லுமறிக.

செழுங்கள்ளு நிறைசோலைத் தண்டலைநீ ணெறியாரே திருடிக் கொண்டே
யெழுங்கள்ளர் நல்லகள்ளர் பொல்லாத கள்ளரினி யாரோ வென்றாற்
கொழுங்கள்ளர் தம்முடன்கும் பிடுங்கள்ளர் திருநீறு குழைக்குங் கள்ள
ரழுங்கள்ளர் தொழுங்கள்ள ராசாரக் கள்ளரிவ ரைவர் தாமே. (80)

கொழுமை—செழுமை. 'கும்பிடுங்கள்ளர், நீறுகுழைத்திடுங்கள்ளர், அழுங்கள்ளர், தொழுங்கள்ளர், ஆசாரக்கள்ளர்' என்பது பழமொழி.

தனத்திலே மிகுத்தசெழுந் தண்டலையார் பொன்னிவளந் தழைத்த நாட்டி
வினத்திலே மிகும்பெரியோர் வாக்குமன மொன்ருகி யெல்லாஞ் செய்வார்
சினத்திலே மிகுஞ்சிறியோர் காரியமோ சொல்வதொன்று செய்வ தொன்று
மனத்திலே பகையாகி யுதட்டிலே யுறவாகி மடிவர் தாமே. (81)

'மனத்திலே பகையு முதட்டிலே யுறவுமாயிருப்பர்' என்பது பழமொழி.

தேரோடு மணிவீதித் தண்டலையார் வளங்காணுந் தேச மெல்லாம்
போரோடும் விறல்படைத்து வீராதி வீரரென்னும் புகழே பெற்ருர்
நேரோடு முலகத்தோ டொன்றுபட்டு நடப்பதுவே நீதி யாகு
மூரோட வுடனேட னுடோட நடுவோட லுணர்வு தானே. (82)

"ஊரோட வொக்க வோடல்வேண்டும்; நாடோட நடுவோடல் வேண்டும்" என்பது பழமொழி.

இழைபொருத்த முலைபாகர் தண்டலையார் வளநாட்டி லெடுத்த ராகந்
தழுதழுத்துப் பாடுவதின் மௌனமா யிருப்பதுவே தக்க தாகுங்
குழகுழத்த கல்வியினுங் கேள்வியினுங் கல்லாமை குணமே நாளும்
வழுவழுத்த வுறவுதனின் வைரம்பற் றியபகையே வண்மை யாமே. (83)

"வழுவத்த வுறவைக்காட்டிலும் வயிரமானபகை நல்லது" என்பதுலகர் பழமொழி.

அருப்பயிலுந் தண்டலைவாழ் சிவனடியா ரெக்குலத்தோ ராகு லென்ன
வுருப்பயிலுந் திருநீறுஞ் சாதனமுங் கண்டவுட னுகந்து போற்றி
யிருப்பதுவே முறைமையல்லா லேழையென்றுஞ் சிறியரென்று மிகழ்ந்து கூறி
னெருப்பினையே சிறிதென்று முன்ருனை தனின்முடிய நினைத்த வாறே (84)

அருப்பயிலும், அரு—அருவம்; பயிலல்—நிகழ்தல். சாதனம் ஈண்டு உருத்திராக்க முதலியகருவிகளென்க "நெருப்புச்சிறிதென்று முன்ருனையில் முடியலாமா?" என்பது பழமொழி.

உரங்காணும் பெண்ணுசை கொடிதாகும் பெண்புத்தி யுதவா தாகுந்
திரங்காணும் பெண்வார்த்தை தீதாகும் பெண்சென்மஞ் சென்ம மாமோ
வரங்காணுந் தண்டலைநீ ணெறியாரே பெண்ணிடத்தின் மயக்கத் தாலே
யிரங்காத பேருமுண்டோ பெண்ணென்ற வுடன்பேயு மிரங்குந் தானே. (85)

"பெண்ணென்ருற் பேயுமிரங்கும்" என்பது பழமொழி.

மையிலே தோய்ந்தவிழி வஞ்சியரைச் சேர்ந்தவர்க்கு மறுமை யில்லை
மெய்யிலே பிணியுமுண்டாங் கைப்பொருளுங் கேடாகி விழல ராவார்

செய்யிலே வளந்தழைத்த தண்டலையார் வளநாட்டிற் றெளிந்த தன்றே
கையிலே புண்ணிருக்கக் கண்ணாடி பார்ப்பதென்ன கருமந் தானே. (86)

விழலர்—வீணர். "கைப்புண்ணுக்குக் கண்ணாடிவேண்டுமோ?" என்பது பழமொழி.

காலமறி தண்டலையார் வளநாட்டிற் கொலைகளவு கள்ளே காமஞ்
சாலவருங் குருநிந்தை செய்பவர்பான் மேவியறந் தனைச்செய் தற்குச்
சீலமுடை யோர்வினையார் பனையடியி லேயிருந்து தெளிந்த வாவின்
பாலினையே குடித்தாலுங் கள்ளென்பார் தள்ளென்பார் பள்ளென் பாரே. (87)

பனையடியிலிருந்து பாலைக்குடித்தாலுங் கள்ளைக் குடித்தானென்பார்" என்பது பழமொழி.

கைக்கெட்டா தொருபொருளுங் கண்டவர்க்கு நகையாகுங் கனமே யில்லை
யிக்கட்டாம் வருவதெல்லாம் லாபமுண்டோ கவறுகையி லெடுக்க லாமோ
திக்கெட்டே றியகீர்த்தித் தண்டலையார் வளநாட்டிற் சீசீ யென்னச்
சொக்கட்டா னெடுத்தவர்க்குச் சொக்கட்டான் சூதுபொல்லாச் சூது தானே.(88)

கவறு—சூதாடுகருவியென்க. "சொக்கட்டான் விளையாட்டுப் பொல்லாத சூதாட்டு" என்பது பழமொழி.

தனமேவும் புற்றடிமண் குருந்தடிமண் பிரமகுண்டந் தன்னி லேய்மண்
மனமேவு மணியுடனே மந்திரமுந் தந்திரமு மருந்து மாகி
யினமேவுந் தண்டலையார் தொண்டருக்கு வந்தபிணி யெல்லாந் தீர்க்கு
மனுபோகந் தொலைந்தவுடன் சித்தியாம் வேறுமுள வவிழ்தந் தானே. (89)

பிரமம்—வேள்வி. "அனுபோகந்தொலைந்தா லவிழ்தமெல்லாம் பலிக்தும்" என்பது பழமொழி. அனுபோகம் ஈண்டு மைதுனம்.

கானமருங் கவரியொரு மயிர்படினு மிறக்குமது கழுதைக் குண்டோ
மானமுடன் வாழ்பவனே மாபுருடன் சுயோதனனை மறந்தா ருண்டோ
வானகஞ்சே ரொலிமுழங்குந் தண்டலையா ரேசொன்னே னரைக்கா சுக்குப்
போனவபி மானமினி யாயிரம்பொன் கொடுத்தாலும் பொருந்தி டாதே. (90)

முதலடியில், "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா—ருயிர்நீப்பர் மானம் வரின்" என்னுந்திருக்குறளைக் குறித்துணர்க. "அரைக்காசுக்குப்போனமானம் ஆயிரம்பொன்கொடுத்தாலும் வாராது" என்பது பழமொழி. அபி—உபசர்க்கம். சுயோதனன்—துரியோதனன். ஆனகம்—வாத்தியம்.

